# பாகம் – 3

## ருத்ராட்சம்மும்! மருத்துவமும்!

ருத்ராட்சம் மணிகளைத் தரும் ருத்ராட்சம் மரம் என்பது ஒரு மூலிகைத் தாவரம். சித்த, ஆயுர்வேத மருத்துவங்களில் இவை மருந்துப் பொருட்களாக பயன் படுத்தப் படுகின்றன. மிகவும் அரிதான சில தகவல்களை மட்டும் இங்கே தொகுத்து பகிர்ந்திருக்கிறேன்.



ருத்ராட்சம் மரத்தின் பழமானது கடினமான ஓட்டுடன் கருநீலமாய் இருக்கும். இதன் உள்ளே இருக்கும் சதைப் பகுதியானது புளிப்பான சாறு நிறைந்திருக்கும்.



மூளையில் உள்ள திசுக்கள் பாதிக்கப் படுவதால் உருவாகும் “காக்காய் வலிப்பு” என்கிற epilepsy க்கு இந்த பழத்தின் சாறு அருமருந்தாக கூறப் படுகிற்து. மேலும் cough, bronchitis, nerve pain, migraine போன்ற வியாதிகளுக்கு நல்ல பலனை தருகிறது.

ஐந்து முக ருத்ராட்சம் ஒன்றை எடுத்து அதில் எலுமிச்சம் சாறுவிட்டு இழைத்து, அந்த சாற்றை தேள் கொட்டிய இடத்தில் தடவினால் வலி உடனே நீங்கும். இந்த ருத்ராட்சம் தூக்கம் இல்லாமல் துன்பப்படுபவர்களுக்கு நல்ல நிவாரணி.

இதை பால்விட்டு இழைத்து அந்த சாந்தை கண் இமைகள் மீது தடவிக்கொண்டால் நிம்மதியான உறக்கம் வரும். இந்த ருத்திராட்சத்தைத் தூளாக்கி, துளசிச் சாற்றில் கலந்து உட்கொண்டால், பக்கவாத நோயும் குணமாகும்.

தண்ணீரில் இதைப் போட்டு சில மணிநேரம் ஊற வைத்து பிறகு ருத்திராட்சத்தை நீக்கிவிட்டு தண்ணீரை உட் கொண்டால் ரத்த அழுத்த உபாதைகள் நிவாரணமாகும்.

சிரசு,உரசு,புஜம் என்பவற்றில் ருத்திராட்சை அணிந்தால் சிவனுக்கு சமமாக மாறலாம் என்றும் எல்லா முயற்சிகளும் சாதனைகளாக்கலாம் என்றும்,அவர்வசிக்கும் பிரதேசமே புண்ணிய பூமியாகுமென்றும் கூறுகின்றார்.

புராணங்கள் எடுத்துரைப்பதற்கு மேல் மருத்துவத்துறை இதன் நற்குணங்களை மிகவும் புகழ்கின்றது. ருத்திராட்சை கழுத்திலணிவதால் புற்று நோய் முதலிய நோய்கள் கூட தணியும் என்று அண்மையில் வெளிவந்துள்ள சில ஆராய்ச்சிக்குறிப்புகள் வெளிப்படுத்துகின்றன. பித்தம்,தாகம் விக்கல் போன்றவை மாறுவதற்கு ருத்திராட்சை நல்லது என்று ஆயுர் வேதம் உறுதிகூறுகின்றது. கபம்,வாதம்,தலைவலி முதலிய பல நோய்களுக்கும் துன்பங்களுக்கும் ருத்ராட்சம் மருந்தாகும் என்று ஆயுர் வேதம் கூறுகின்றது. ருசியை விருத்தியடையச் செய்யும் என்று ருத்திராட்சையைச் சிறப்பித்து நிரூபித்திள்ளனர்.

இது சில மன நோய்களுக்கும் சாந்தமளிக்கும் என்று கண்டுள்ளனர். மேலும் பல மருந்துகளிலும் ருத்திராட்சை ஒரு சேர்வைப் பொருளாகும். ருத்ராட்சம் வறுத்து நாவில் பூசினால் பேச்சுத்திறனை மறுபடியும் பெற்றுள்ளதாக பல இடங்களில் கேள்விப்பட்டிருக்கின்றோம். ருத்திராட்சை பசுவின் சிறுநீர்,துளசிநீர்,இளநீர்,பிரம்மி என்பவை சேர்த்து பிரம்ம முகூர்த்தத்தில் அருந்துவது புத்தி விருத்தியடைய உதவும் எனக் கண்டறிந்துள்ளனர். கண்டகாரி, திப்பலி என்பவையுடன் ருத்திராட்சை சேர்த்து கஷாயம் செய்து அருந்தினால் சுவாச கோசம் சம்பந்தப்பட்ட நோய்கள் குணமடையும். பார்க்கப் போனால் ருத்திராட்சையின் ஔடத குணங்கள் ஏராளம் ஏராளம்.இதுதான் ருத்திராட்சை அணிவதிலும் நம் முன்னோர்கள் மிகமுக்கியத்துவம் அளித்திருந்தனர்.

ஒருமுக ருத்ராட்சம் மணியை உடலில் அணிவதன் மூலம் ஆஸ்த்துமா, எலும்புருக்கி நோய், மூட்டுவலி, பக்கவாதம், கண்களில் ஏற்படும் பிரச்சினைகளின் தீவிரத்தை தணிக்க முடியும்.

இருமுக ருத்ராட்சம் மணியை உடலில் அணிவதன் மூலம் தீக்காயங்களின் பாதிப்பில் இருந்து விடுபடலாம் என கூறப்பட்டிருக்கிறது. மேலும் கவனசிதறல், மன அழுத்தம், குழந்தைபேறு இல்லாதவர்கள் இருமுக மணியை உடலில் அணிவதன் மூலம் நல்ல பலன் பெறமுடியும்.

மூன்று முக மணியினை அணிவதால் ஆயுதங்களினால் ஏற்படும் காயங்களின் பாதிப்பினை குறைக்கலாமாம். மேலும் தாழ்வு மனப்பான்மை, எதிர்மறை சிந்தனையுடைய்வர்களுக்கு நல்ல பலனை அளிக்குமாம்.

நான்கு முக ருத்ராட்சம் மணியை உடலில் அணிவதன் மூலம் இருமல் தொல்லைகளில் இருந்து தீர்வு பெறலாம். மேலும் இரத்த ஓட்டம் சிற்ப்பாகும்.

ஐந்துமுக ருத்ராட்சம் மணியை உடலில் அணிவதன் மூலம் உடல்பருமன் பிரச்சினைகள் மற்றும் இதயக் கோளாறு உடையவர்களுக்கு நல்ல பலனைத் தருமாம்.

ஆறுமுக ருத்ராட்சம் மணியை உடலில் அணிவதன் மூலம் குழந்தையின்மை, வலிப்பு மற்றும் பேச்சாற்றல் திறன் பாதிக்கப் பட்டவர்களுக்கு நல்ல பலனைத் தரும்.

ஏழுமுக ருத்ராட்சம் மணியை உடலில் அணிவதன் மூலம் மூச்சுக் கோளாறு மற்றும் கால்களில் பாதிப்புடையவர்களுக்கு நல்ல பலனைத் தரும்.

எட்டுமுக ருத்ராட்சம் மணியை உடலில் அணிவதன் மூலம் வயிறு தொடர்பான பிரச்சினைகள், தோல்வியாதிகளுக்கு நல்ல தீர்வு கிடைக்கும்.

ஒன்பதுமுக ருத்ராட்சம் மணியை உடலில் அணிவதன் மூலம் தன்னம்பிக்கை பெருகி உடல் ஆரோக்கியம் மிளிரும்.

பத்துமுக ருத்ராட்சம் மணியை உடலில் அணிவதன் மூலம் உறுதியான மனநலம் வாய்க்கும்.

ருத்ராட்சம் என்பன தெய்வத்தன்மையும், மருத்துவக் குணங்களும் ஒருங்கே கொண்டவை.ருத்ராட்சம் மணிகளைத் தரிப்பதால் உடம்பிற்கும் உள்ளத்திற்கும் உயிருக்கும் பல நன்மைகள் விளைவிக்கின்றன.ருத்ராட்சம் மணிகள் உடலுக்கு சுகத்தையும் ஆரோக்கியத்தையும் தருகின்றன.

உடம்பில் வாதம், பித்தம், கபம் என்ற மூன்றும் ஒன்றையொன்று முந்தாமல் ஒரே சீராக வைத்திருக்க ருத்ராட்சம் மணிகள் துணை செய்கின்றன.

தீய சக்திகள் உடம்பைத் தீண்டாமல் கவசமாக நின்று ருத்ராட்சம் மணிகள் காக்கின்றன. உடம்பில் நோய்கள் வராமல் தடுக்கின்றன.

இதை அணிவதால் உள்ளம் அமைதியடைவதோடு, பக்குவமடைகிறது. உள்ளத்தில் பக்தி உணர்வுகள் பெருகின்றன. தீய எண்ணங்கள் தோன்றுவதில்லை.

உருத்திராக்கம் சுய ஆற்றலையும், சுய அன்பையும் மேம்படுத்த உதவும். அணிவோரின் உள் ஒளியை இது மேலோங்கச் செய்கிறது. இது பெரியம்மை, காக்காய் வலிப்பு, கக்குவான் போன்ற பல்வேறு அபாயகரமான நோய்களைக் குணப்படுத்த வல்லது. குறிப்பிட்ட முறையில், மருத்துவ விதி முறைகளைக்கேற்பக் கையாளப்பட்டால் இது மிகவும் நச்சுத்தன்மை வாய்ந்த புண்களையும் கூடக் குணப்படுத்தும்.

பொதுவில் ருத்ராட்சம் மணிகள் தங்களை சுற்றியுள்ள வெப்பத்தை கிரகித்துக் கொண்டு சுற்றுப் புறத்தினை குளிர்விக்கும் தன்மையுடைவை. இதனை நம் உடலில் அணிவதால் தேகம் குளிர்ச்சியாகும் என கூறப் படுகிறது. நம் துறவிகள் ஏராளமான ருத்ராட்சம் மணிகளை அணிந்தன் பின்னால் இத்தகைய அறிவியல் இருந்திருக்கக் கூடும்.

நாம் அருந்தும் நீரில் ருத்ராட்சம் மணியை ஐந்து நிமிடம் ஊற வைத்து அந்த நீரைப் பருக உயர் குருதி அழுத்தம் கட்டுக்குள் வருமாம். தீராத காய்ச்சல் உள்ளவர்களுக்கு பழைய ருத்ராட்சம் மணியை தேனில் உரைத்துக் கொடுக்க காய்ச்சல் குறையுமாம். இதைப் போலவே ருத்ராட்சம்க் கொட்டையினை குடிக்கும் நீரில் ஐந்து நிமிடம் ஊற விட்டு அந்த நீரில் சிறிது மஞ்சள் தூளை சேர்த்துக் கலக்கி அருந்தினால் எத்தகைய இருமல் மற்றும், வாந்தி தணியுமாம்.

"திருச்சிற்றம்பலம்"

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.




# ஆன்மீகம்